

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில்
காட்சித் தகவலியல் துறை - தொடக்க விழா நிகழ்ச்சியின் போது

ஜய - ஆவணி- 2014 - ஆகஸ்ட்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - ஆவணி - 2014 - ஆகஸ்ட்     இதழ் - 26



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## காக்கின்றாள் அடிகள் போற்றி

சேல்விழிக்கு மையெழுதிச் சிங்கார நகைபூட்டிச் சிரிக்கும் மாது
செய்வினைகள் நலியவெனச் சேவடிகள் பணிவார்க்குச் செய்ய பூவாம்
சேவடியால் மாற்றுபவள் சீர்பூத்த கழனிநகர் சிறக்கக் காக்கும்
செம்பவள வாயழகி சித்திரப்பொன் வதனமகள் சிவன்பால் இன்பப்
பால்மொழிகள் தானுரைக்கும் பத்தினியாம் திருநெல்லை பாரில் எங்கும்
பக்திமணம் பரப்புவார் பலர்வாழும் கோயிலூர் ஞான பூமி
பாண்டியன்தன் வாள்மறைத்துப் பார்த்தகொற்ற வாளீசர் பாதம் பட்டுப்
பலமுனிவர் வந்துவந்து நீராடும் தேனாறு பாயும் சிற்றூர்
மால்மகிழும் தங்கையென வந்ததிரு நெல்லையெனும் மங்கை வாழும்
மண்ணிதனை மிதித்தவர்கள் மதிப்புறுவர் என்பதனால் மாத வத்தோர்
மங்கையிவள் பொற்பாத அரவிந்த மலர்கண்டு மகிழ்ந்த தாலே
மாண்பார்நல் வீடுற்றார் என்பதுகண்(டு) ஆண்டவரும் மங்க லஞ்சேர்
ஆலயத்தைக் கட்டியவள் பாதமலர்த் தாமரையை அடைந்தார் அந்த
அடியாரிங்கே அமைத்தமடம் அனைவருமே கல்விபெற அமைத்த சாலை
அடிகளாம் நாச்சியப்பர் அளித்தகொடை அழகுநெல்லை அம்பாள் இங்கே
அறுகுபோல் வேரோடி அதுவளரக் காக்கின்றாள் அடிகள் போற்றி !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

பக்திப் பயணத்தின் அடுத்த கட்டம் - முக்கியமான கட்டம் - தியாகம். அர்ப்பணம்!

ஒருபக்தன் இறைவனுக்கு மனம், மெய், மொழி மற்றும் பொருள் ஆகியவற்றால் தொண்டியற வேண்டும். மனம் அவனையே, அவனுடைய கல்யாணகுணங்களை , எல்லையற்ற ஆற்றலை கருணை வெள்ளத்தைப் பக்தர்கட்கு இரங்கும் அவனுடைய அருளை, பக்தன் வேண்ட இறங்கி வந்து அருளும் அவன் எளிவந்த தன்மையை எல்லாம் மனம் எப்போதும் சிந்தித்து அவனுக்கு ஆட்பட்டிருக்க வேண்டும். மேலும் தன் உடம்பாலும் - தன்னுடைய பொருளாலும் முடிந்த சேவைகளைச் செய்ய வேண்டும். சேக்கிழார் - தொண்டர்க்கு இலக்கணம் போல் திருக்கூட்டச் சிறப்புப் பகுதியில் பலப்பலக் குணங்களைச் சொல்வார். அதிலே - கைத்திருத் தொண்டும் செய்கடப் பாட்டினர் (பெ.புராணம்) என்று உடலாற் செய்யும் தொண்டும் இறைவன் விரும்புகிற பணியே என்று தெரிவிக்கிறார்.

மணிவாசகப் பெருமானோ

"ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே." (திருச்சதகம் - 19)

என்று மெய்வருந்திச் செய்யும் தொண்டே சிறந்த தொண்டு என்று அறிவுறுத்துகிறார்.

இன்றைக்கு நம் கோவில்கள் சரியான பராமரிப்பு இன்றிக் கிடக்கின்றன. பெரும் பெயர் பெற்ற திருக்கோவில்கள் தவிர மற்றவை கவனிப்பாரின்றியே உள்ளன. ஆன்மிகச் சங்கங்கள், மன்றங்கள்

அவ்வப்போது கோயில்கட்கு உழவாரப் பணி மற்றும் பொருட்கொடை வழங்கிப் பாதுகாக்கலாம்.

தெய்வத் திருப்பணிக்குப் பொருள் மட்டும் போதாது; உழைப்பும் தேவை. பொருளும் உழைப்பும் இயன்றவர்கள் இரண்டும் நல்கலாம். இல்லை ஏது முடியுமோ அதைச் செய்யலாம்.

உழைப்பு தானத்தை இறைவனும் விரும்புகிறான். அங்கீகரிக்கிறான் என்பதைப் பெரியபுராணம் சொல்கிறது.

திருவீழிமிழலைத் திருத்தலத்தில் கடும் பஞ்சம். மக்கள் தவிக்கிறார்கள். தெய்வ அருள்பெற்ற அருளாளர்கள் ஞானசம்பந்தப் பெருமானும், அப்பரடிகளும் திருவீழிமிழலை வந்து இறைவனை வேண்டுகிறார்கள். அவன் கனவிலே வந்து இருவருக்கும் தனித் தனியாகப் 'படிக்காசு' தருவதாகக் கூறி அப்படியே தருகிறான்.

அப்பருக்குப் பத்தரைமாற்றுப் பசும்பொன் தருகிறான். ஞானப்பிள்ளைக்குச் சற்றே மாற்றுக் குறைந்த காசு தருகிறான். சம்பந்தருடைய காசை உரசிப் பார்த்து அதற்குரிய பணம் தரச் சற்றே தாமதம் ஆகிறது. அதனால் சம்பந்தரின் மடத்திலே அன்னதானம் சற்றே தாமதம் ஆகிறது. உமையவளின் பிள்ளையல்லவா தந்தையைக் கேட்கிறார். 'அப்பர் உடலாலும் பணிசெய்கிறார் அதனாலே ஊதியம் சற்றே அதிகம் தருகிறேன்' என்கிறார். இறைவன் பிள்ளையோ ஏற்காது அப்பனைப் பாடிப் பசும்பொன்பெறுகிறார் என்கிறது பெரியபுராணம்.

"வாசி தீரவே காசு நல்குவீர்
மாசில் மிழலையீர் ஏசல் இல்லையே" (992 - முதல் திருமுறை)

எனவே மனதார நாம் செய்கின்ற பணிகளிலே இறைவன் மகிழ்கிறான் என்பது தெரிகின்றது.

எந்தப்பணி செய்தாலும் அது 'இறைவனுக்கே' என்று செய்யவேண்டும். அனைத்தும் இறைவனுக்கே. பெறும் பயன்களும் இறைவனுக்கே.

இஸ்லாமியர்க்ள சொல்வது போல எல்லாப் புகழும் இறைவனுக்கே என்று மனத்தூய்மையுடன் பயன்பற்றிக் கவலைப்படாமல் பணி செய்யுங்கள்.

யாவராலும் பணிகள் செய்ய இயலும். திருமூலர் சொல்வது போல உழைப்புத் தானத்தை இறைவன் விரும்புகிறான். அங்கீகரிக்கிறான் என்பதைப் பெரியபுராணம் சொல்கிறது.

"யாவர்க்கும் ஆம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒருவாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே."

(419- முதல் பகுதி திருமந்திரம்)

எனவே என்னால் என்ன செய்யமுடியும் என்று கேட்காதீர்கள்.

பாரதி சொன்னது போல முடிந்தவர் நிதி தருவீர் - முடியாதவர் உழைப்பை நல்குவீர்.

இறைவன் தொண்டு. இன்பம் பயக்கும்., இனிமை தரும்.
இம்மை மறுமை இரண்டிற்கும் பயன் தரும்.
பணிசெய்வோம்! வாரீர்! பணிசெய்வோம்!

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*

ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

**உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

## நூல்

இப்படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சீடன் கேட்கும்படி: இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் தான் ஆனால், சாட்சியைப்போல, ஒரு தன்மையாகத் தோற்ற வேண்டுமே அல்லாமல், பஞ்ச பூதங்களைப் போலத் தனக்கு அந்நியமாகக் காண கணக்கில்லை. இந்த இருபத்தெட்டும், தனக்கு அந்நியமேயானால், எப்போதும் புறம்பட்டே இருக்க வேண்டுமல்லாமல், தான் ஆக வழுங்கக் கணக்கில்லை. தானுமாய், தனக்கந்நியமுமாய் இருக்கு மென்கிறது, இருட்டாதித்தன் என்றாற் போலும், வெள்ளாள தீக்ஷிதன் என்றாற் போலும், விருத்தமாம் என்னும் சங்கைக்கு:- பரமார்த்தமாகத் தான் என்கின்றது ஒரு வகையும், அத்தியாசத்தினாலே தான் என்கின்றது ஒரு வகையும், ஆக இருவகையும், உண்டு. சாட்சி சைதன்னியத்தைத் தான் என்கின்றது, பரமார்த்தம் அல்லாமல் உபசாரம் அல்ல, தனக்கு அந்நியமாய் இருக்கின்ற இந்த இருபத்தெட்டையும், தான் என்கின்றது, கட்டையைக் கள்ளன் என்றாற்போலும், பழுதையைப் பாம்பு என்றாற்போலும், புத்திர தாராதிகளைத் தான் என்றாற்போலும், மயக்கமே அல்லாமல் உண்மை அல்ல. ஆகையினால், அஞ்ஞானகாலம் தொடங்கித் தான் அல்ல என்று காணப்பட்ட தத்துவங்கள்-7, இப்போது இப்படி விவேகம் பண்ணின பின், தான் அல்ல என்று காணப்பட்ட தத்துவங்கள்-28, ஆக இந்த 35 தத்துவங்களையும், அதத‌ற்குச் சொன்ன, குணம் குறிகளுடனே கூடக் காண்கின்ற அறிவானது, கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவே இருந்து, கடத்தைப் பார்க்கின்றதுபோல, அவைகளை அறிகின்றது என்றும், முப்பத்தாறாம் தத்துவமாகிய அதுவே தான் என்றும், அதுவே பரமசிவம் என்றும், கலக்கமறத் தெளிந்தவனே சிவ தரிசனம் உடைய சீவன் முத்தன் என்று சொல்லப்படுவன் என்று உத்தரம்.

## உரை

உடனடியாக மாணவனுக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. மேற்கூறிய 28 தத்துவங்களும் ஒன்று தனக்காகப் பணி செய்ய வேண்டும். அல்லது தனக்கன்னியமாக இருக்க வேண்டும்.

பிரம்மம் போல் சாட்சியாக இருந்து - தனக்காகப் பணி செய்வதாக இருக்க வேண்டும். அல்லது ஐம்பூதங்கள் போலப் பிறவற்றிற்காக-தனக்கு அந்நியமாக உள்ளவற்றிற்காக இயங்க வேண்டும். அல்லாது இரண்டும்கெட்டானாகத் தனக்காகவும் தனக்கு அந்நியமாகவும் இருக்கும் என்பது கதிருட்டு என்பது போலவும் வெள்ளாளப்பிராமணர் என்பது (நாலாவது வர்க்கத் தொழிலாளியும் முதல்வர்க்கத் தொழிலாளியும்) போலக் குழப்பமாக உள்ளது என்று மாணவன் தன் ஐயத்தைக் கேட்டான்.

குரு உடனே இது சீடனே! பரமார்த்தமாகத் 'தான்' என்பது ஒருவகை உலகாயதமாக அத்தியாகமாகத்தான் என்பது ஒரு வகை.

மரத்தை இருட்டில் கண்டு கள்ளன் நிற்கிறான் என்பது போல் தன்மனைவி, மகன், சுற்றம் என்பவையெல்லாம் தானாகப் பாவிப்பவது கற்பிதமே; உண்மை அல்ல. அதே போல் பிரமத்தை - ஆன்மாவை நான் என்பது முதலாவது நிலை. அது அலங்காரத்திற்காகச் சொல்வது அல்ல.

எனவே ஆரம்பகாலம் முதல் 'தான்' அல்ல என்று காணப்பட்ட புரிந்துகொண்ட ஏழுதத்துவங்களுடன் (பஞ்ச பூதங்கள் - ஈஸ்வரன் - மாயை ஆக 7) இப்பொழுது ஆராய்ந்து அறிந்துகொண்ட, கற்றுணர்ந்து கொண்ட 28 தத்துவங்களும் தான் அல்ல என்று உணரப்பட வேண்டும். பானை என்ற பொருளைத் தனித்து நின்று காண்கின்ற சாட்சி போல இந்த 35 தத்துவங்களையும் விட்டுத் தனித்து நின்று தள்ளி நின்று சாட்சியாகக் காண்கின்ற 36 ஆவது தத்துவமான பிரம்மமே நாம் என்று தெளிய வேண்டும்.

அப்படித் தெளிந்து உணர்ந்த ஞானியே சீவன்முத்தன் எனப்படுவார். என்று சீடனின் ஐயத்தைத் தெளிவித்தார்.

## நூல்

இப்படிப் பிரமமே தாம் என்றும், மற்றை முப்பத்தைந்து தத்துவங்களும் தமக்கு அந்நியம் என்றும், பிரித்து அறியாத அவிவேகிகள், அகங்காரக் கிரந்கியினாலே, புத்திர தாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கிறோம் என்கிற மூடகரம் போல, இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் தம் தொழில் என்று மயங்குகின்றபடியினாலே, இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினால் கட்டுப்பட்டு, அந்தக் கர்மத்தின்படியே சனன மரணாதி சம்சாரத்திலே அடிபடுகிறோம் என்று மயங்குவர். பிரம சைதன்னியமே தான் என்றும், மற்றை முப்பத்தைந்தும் தான் அல்ல என்றும் தெளிந்த விவேகியானவன், அகங்காரக் கிரந்தி அற்றபடியினால் இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் நான் செய்யவில்லை என்றும், இந்த இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை என்றும், திடப்படத்தேறி மயக்க மற்று இருக்கின்றபடியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களி னின்றும் விடுபட்டுக் கர்மம் இல்லாதபடியினால், சனன மரணாதி சம்சாரம் இல்லாமல், முத்தனாய்ப் பிரம மாத்திரமாகவே இருப்பன். இவனைச் சீவன் முத்தன் என்றும், திடப் பிரக்ஞன் என்றும், அதிவர்ணாச்சிரமி என்றும், குணாதீதன், என்றும், பகவற்பத்தன் என்றும், பிராமணன் என்றும் வாசிட்டம் முதலிய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோட்சம் அடையக் கடவர்.

## உரை

இவ்வாறு பிரம்மமே தான் என்றும் மற்றைய 35 தத்துவங்களும் தனக்கு வேறானவை, அந்நியமானவை என்றும் உணராது, தன் மனைவி மக்கள் சொத்து சுகம் என்று மயங்குகிறவன் பக்குவம் இல்லாத அஞ்ஞானி. 28 தத்துவங்களின் செயல்களைத் தனது செயல்என்றும் மனைவி மக்கள் துன்பத்தைத் தன்துன்பம் என்றும் அபிமான மயக்கத்தாலே துன்பப்படுகிறார்கள். இந்த 28 தத்துவங்களின் செயல்களாலே ஏற்படும் கர்ம வினைகளினாலே

நல்வினை தீவினை எனவும் அதனால் தொடர்கிற பாவபுண்ணியங்களும் அவற்றாலே ஏற்படுகிற பிறப்பு இறப்புச் சுழற்சியிலும் அகப்பட்டுத் திண்டாடுகிறோம்.

இந்த வினைகளை நான் செய்யவில்லை; இதனால் விளையும் இன்ப துன்பங்களை நான் ஏற்கவில்லை என்று திடம்படத்தேறி புண்ணிய பாவம் எல்லாவற்றையும் ஒதுக்கி மற்றைய பற்றுக்களை விட்டுச் சாந்தமாக நடப்பவை அனைத்திலும் பங்கெதுவும் ஏற்காமல் சாட்சியாக இருப்பவன் 'சீவன் முத்தன்' என்று அழைக்கப்படுகிறான். செயலும் செய்பவனும் இன்றி, சாட்சி மட்டுமாக இருப்பவன். இப்படிப்பட்டவரை - திடப்பிரக்ஞன் (திடமான சித்தம் உடையவன்) குணாதீதன் (குணங்களைக் கடந்து நிற்பவன்) பகவற்பத்தன் (பகவானுடைய பாதத்தில் இருப்பவன்) என்றெல்லாம் அழைக்கப்படுகின்ற பெருமை உடையவர்கள்.

*நா நா சீவ வாதக் கட்டளை உரை நிறைவுற்றது.*

## மடாலய நிகழ்வுகள்

கோவிலூர் அருள்மிகு திருநெல்லையம்மன் உடனாய கொற்றவாளீசுவரர் திருக்கோயில் ஆடிப்பூரத்திருவிழா 21.7.2014 அன்று தொடங்கி 2.8.2014 வரை பதின்மூன்று நாள்கள் நடைபெற்றது. நகரத்தார், நாட்டார் மற்றும் மண்டகப்படிதாரர்கள் அனைவரும் நாள்தோறும் விழாவில் பங்கேற்று அம்மன் உடனாய ஈசுவரரின் அருள்பெற்றனர்.

திருவிழா நாள்களில் கோவிலூர் நாதஸ்வர, தவில் மற்றும் திருமுறைக் கல்லூரி மாணவர்களின் இன்னிசை நடைபெற்றது.

22.7.2014 அன்று 3ஆவது பட்டம் ஸ்ரீமத் கருணாநிதி சுவாமிகள் குருபூஜை நடைபெற்றது.

29.7.2014 அன்று நேமத்தான்பட்டி பழனியப்ப ஐயா குருபூஜை நடைபெற்றது.

30.7.2014 அன்று ஸ்ரீமத் துறவு ஆண்டவர் குருபூஜை நடைபெற்றது.

ஆடிப்பூரத் திருவிழாவை முன்னிட்டு 30.7.2014 அன்று மாலை 6.00மணி அளவில் ஆன்மீகச் சொற்பொழிவு நிகழ்ச்சி நடைபெற்றது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் தமிழாகரர் முனைவர் பழ. முத்தப்பன் கொண்டும் கொடுத்தும் என்னும் தலைப்பில் ஆன்மீகச் சொற்பொழிவு நிகழ்த்தினார். முன்னதாகக் காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்று உரை நிகழ்த்தினார். நிறைவில் பேராசிரியர் ம. கார்மேகம் நன்றி கூற நிகழ்ச்சி இனிதே நிறைவுற்றது.

31.7.2014 அன்று மாலை 6.00மணி அளவில் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் முன்னிலையில் சிந்தனைப் பட்டிமன்றம் நடைபெற்றது. காப்பியக் கவிஞர் நா. மீனவன் வரவேற்புரை நிகழ்த்தினார். பெரியபுராணத்தின் புகழுக்கும் பெரிதும் காரணம் சரித்திரக் கூறுகளா ? பூகோளக் கூறுகளா ? என்னும் தலைப்பில் அமைந்த பட்டிமன்றத்திற்குக் காசி ஸ்ரீ பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன் நடுவராகப் பொறுப்பேற்றுச் சிறப்பித்தார்.

சரித்திரக் கூறுகளே என்ற அணியில் பேராசிரியர் நா. சுப்பிரமணியன், முனைவர் மா. சிதம்பரம், முனைவர் நா. வள்ளி ஆகியோரும் பூகோளக் கூறுகளே என்னும் அணியில் முனைவர் கரு. முத்தையா கவிஞர் நீ. இரவிச் சந்திரன், பேராசிரியர் ம. கார்மேகம் ஆகியோரும் பேசினர். சரித்திரக் கூறுகள் உயிர்போன்றது என்றும் பூகோளக் கூறுகள் உடல் போன்றது என்றும் கூறி இரண்டுமே சேக்கிழாரின் பெரியபுராணத்திற்குப் புகழ்சேர்ப்பவை எனத் தீர்ப்பு வழங்கினார் நடுவர். புலவர் மெய்யாண்டவர் நன்றி கூற நிகழ்ச்சி இனிதே நிறைவுற்றது.

2.8.2014 அன்று மாலை 6.30 மணி அளவில் ஆடிப்பூரத் திருவிழாவின் நிறைவு நாளில் தேவகோட்டை தமிழிசைப் பள்ளி மாணவிகளின் நடனநிகழ்ச்சி நடைபெற்றது. தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியின் முன்னாள் முதல்வர் டாக்டர்

சொக்கலிங்கம் மற்றும் கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் டாக்டர் சே. குமரப்பன் ஆகியோரின் ஏற்பாட்டில் நடைபெற்ற இந்நிகழ்ச்சியினைக் கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமைதாங்கி ஆசியுரை கூறித் தொடங்கி வைத்தார்கள். ஏராளமான மாணவர்களும் பொதுமக்களும் இந்நிகழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்தனர். பங்கேற்ற மாணவச் செல்வங்களுக்கு நினைவுப் பரிசுகள் வழங்கப்பெற்றன.

6.8.2014 அன்று பிற்பகல் 3.00 மணியளவில் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் காட்சி தகவல் இயல் துறை வகுப்புகள் தொடக்க விழா நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையேற்று ஆசியுரை வழங்கினார். கல்லூரி முதல்வர் டாக்டர் சே. குமரப்பன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். இசை அமைப்பாளர் மற்றும் இயக்குநர் திரு. கங்கை அமரன் வகுப்புகளைத் தொடங்கி வைத்துச் சிறப்புரையாற்றினார்.

காட்சி தகவல் இயல்துறையின் சிறப்பினைப் பற்றி அகில இந்தியத் திரைப்படத் துறையில் பணிபுரிந்த திரு.பாபு இராமசாமி உரையாற்றினார். இத்துறையில் பேராசிரியர்களாகப் பணிபுரிய உள்ள திரு.B. கண்ணன், திருமதி R. சகிலா, திரு.E.M.அருண், திரு.AL. இராமசாமி ஆகியோரின் சிறப்புகளைத் திரைப்படத் தொகுப்பாளர் திரு.B. லெனின் எடுத்துரைத்தார். இந்திய ரஷ்ய வணிகம் மற்றும் தொழிலியற் கழகத்தின் பொதுச் செயலாளர் திரு. P. தங்கப்பன் வாழ்த்துரை வழங்கினார். திரு.AL. இராமசாமி நன்றி கூற நாட்டுப் பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது.

9.8.2014 அன்று பட்டினத்தார் குருபூஜை நடைபெற்றது.

13.8.2014 அன்று அரு.சா. நாராயணசாமி குருபூஜை நடைபெற்றது.

15.8.2014 அன்று காளையார் கோவில் செல்லப்ப சுவாமி குருபூஜை காளையார்கோவிலில் நடைபெற்றது.

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### II/01/03 முமுட்சுப் பிரகரணம் (வீடுபேற்று விருப்புடைமைப் பகுதி)

( முற்குறிப்பு : இந்நூலில், 28 பாடல்களை மட்டுமே கொண்ட, இப்பகுதியே மிகச்சிறு பிரகரணமாகும். முதல் 5 பாடல்களில் வாசனை பற்றிய தத்துவம் கூறப்படுகிறது. பாடல் 11-28லும் தத்துவமே கூறப்படுகிறது. இப்பகுதியில் கதைப் பெயர் ஏதும் தரப்படவில்லை. ஆனால், மேலுலகில் உண்டான வசிட்டர், எத்தகைய ஆக்கல் தொழில்(சிருஷ்டி) மூலமாக இப்புவிக்கு வந்தார், மற்றும் ஏன் வந்தார் என்பன பற்றிப் பாடல் 6-10ல் கூறப்படுவனவற்றை இங்குக் கதைப் பகுதியாகக் கொடுத்துள்ளது).

**கதைப்பகுதி:** இப்பகுதிக்கு முன்னுரையாக, கோவிலூர் உரையில், "ஸ்ரீ வசிட்ட பகவான் முன்னுற்ற யாவற்றையும் அநுசந்தித்துப் பார்த்து, விஸ்தாரமாக அவற்றை உபதேசிக்க விரும்பி, சற்குருவின் தியான வடிவ மங்கலத்தைச் செய்து கொண்டும், வித்தையின் சம்பிரதாய சுத்தியைக் காண்பித்துக் கொண்டும்...... முன்னர் யாவர்க்கும் சர்வ சம்சார துக்க உபசாந்தியின் பொருட்டு, எந்த ஞான சாதனமான சாத்திரம் அருளப்பட்டதோ அவ்விதமே கூறுகிறேன், 'இராகவ கேள்' எனத் தொடங்குகிறார்", என்று அருளப்பட்டுள்ளது.

**"பொன்உல கத்தினில் புவியில் அந்தரத்(து)......"** எனத் தொடங்கும் பாயிரப் பாடல் (மங்களாசரணை), ஆன்மாவை வணங்குவதாகும். **"தேன் கமலத்(து) அயன் உரைத்த மொழிகேள் என்ன....."** எனத் தொடங்கும் கதைப் பகுதியில்,

**"ஓங்குமுனி உரைசெய்வான் முடிவுற்று எங்கும்**
**உளதாகி அனைத்தினுக்கும் உரையுளாகி**
**வீங்குபொருள் களில் விளக்கம் ஆகி மேவுமெய்ஞ்ஞான**
**விண்ணினின்று விண்டு வந்தான்"** எனப்

பரம்பொருளின் இதயத்தே பிரம்மா உண்டானமை கூறப்பட்டுள்ளது.

மனதின் பலவாறான எண்ணங்களைப் போல, பலவாறான உயிர்களையும் பிரம்மா உண்டாக்கினார். அவர், பாரத கண்டத்து உயிர்கள் அளவிலாத் துன்பமடைவதைப் பார்த்து, அவர்கள் நன்மையுற வேண்டுமென நினைத்து,

**"பல கருமம் தவம்தானம் நதிமற்றெல்லாம்**
**பவம்தீரா ஞானத்தால் பவம் போமென்றே**
**கலகமிலா மனத்தளித்தான் என்னைத் தன்போல்**
**கமண்டலமும் செபவடமும் கையில்காண"** என

வசிட்டரை உண்டாக்கினார்.

வசிட்டர், பிரம்மாவை வணங்கினார். பிரம்மாவும், தாம் இருந்த தாமரையின் ஓர் இதழில் வசிட்டரை உட்காரப் பணித்தார். மேலும், வசிட்டரின் சிந்தனையில் சிறிது காலம் மாயை சேரவேண்டுமென எண்ணினார். இதனால் வசிட்டர் மயக்குற்று, உண்மை அறிவை மறந்து, துயருற்றுப் புலம்பினார். (எவ்விதமான களங்கமுமற்றிருந்த அவர், இவ்வாறு அறியாமைக்கு ஆட்பட்டார்)

"மைந்தனே, ஏன் துயரடைகிறாய்", எனக் கேட்ட பிரம்மாவிடம் வசிட்டர், "மாயை(துன்பமுறுதல்) தரும் வாழ்க்கை எவ்வாறு தொடங்கிற்று, அது எவ்விதம் தொலையும்," எனக் கேட்டார். முன்னம் ஆன்மாவை அறிந்தவராயும், அலைவற்றும் இருந்த வசிட்டரிடம், பிரம்மா, " **.......நாமே நின் அறிவைமாற்றி**

**ஊன்மாயை பின்பொழித்தேம் உயிரெல்லாம் நின்**
**உபதேசம் பெற்றுய்ய உபாயம் செய்தோம்**
**மேன்மாயும் வினைநிறைந்த சம்புத்தீவின்**
**மேவிய பாரத வருடம் விரைவின்மேவி**
**தான்மாளாக் கிரியினர்க்குக் கிரியை சாற்றிச்**
**சாதனம் உள்ளோர்க்கு உணர்வைச் சாற்று கென்றான்."**

இவ்வாறு இப்புவி மேவிய வசிட்டர், இராகவரிடம்,

**"அவனுரைப்ப வந்துஉயிர்கள் உளநாள் எல்லாம்**
**ஆகுவன்இங்கு ஒருசெயலும் ஆசைஇல்லை**
**இவண்இருந்து சுழுத்திஉறு செய்கையாலே**
**இடர் மனத்தைக் கடந்துசெயல் யாவுஞ்செய்கேன்**
**கவர்உறும் என்செயல் ஒன்றும்இல்லை வீர**
**கலைநிறைவும் பேதமையும் கருமத்தாலே**
**விவரமதாய் ஆராய்ந்து மெய்க்குருவைக்**
**கொண்டுணர்வோர் மேன்மை மிக்கோர்,"**

(சுழுத்தியுறு செய்கை = ஆழ்நிலை உறக்கத்தவனின் விருப்பு வெறுப்பற்ற செயல் போல) எனவும் கூறி, குருவை அடைபவன் நான்கு பண்புகளை உடையவனாதல் வேண்டுமெனவும், அவையே வீடுபேறடைவதற்குத் தேவையான தகுதிகள்(அதிகாரித்வம்) எனவும் தெரிவித்தார்.

**தத்துவப்பகுதி:** நமது முயற்சிகளை, நிவிர்த்தி (விலக்கி ஒழித்து/ சரியாக்கும் நெறி) மற்றும் பிரவிர்த்தி (சேர்த்தல் நெறி) என இரு வகையாகக் கூறலாம். இவற்றில் முதலாவதே வீடுபேற்றிற்கு உதவுவது. நம் வாசனைகளும் இரு வகைப்படும். அவை, தூய வாசனையும் மலின (களங்கமுடைய) வாசனையுமாகும். இவற்றில் நாம் தூய வாசனையைத் திடப்படுத்த வேண்டும். அதுவே மாயையை நீக்கி, நம்மை நிவிர்த்தி நெறியில் சேர்க்கும், என வசிட்டர் கூறினார். இதற்கு இராகவர், "என் பிராரத்தம் (தற்பிறப்பு விதி) மற்றும் மலின வாசனை ஆகியன என்னை எதிர்மறையாக ஏவினால் தீமை கிட்டுமே, மலின வாசனையை அனுபவிக்க வேண்டியவன் எவ்வாறு மாயையை வெல்ல இயலும்," எனக் கேட்டார். அதற்கு வசிட்டர், "அவ்வாறு சோம்பிவிடாது, இடைவிடாத கடின முயற்சியால், நாமே மலினவாசனையைத் தூய வாசனையாக மாற்றிவிடலாம், "என்றார்.

மேலும், தன்னை அறிதல், வீடுபேறடைதல் போன்றவற்றில் விருப்பமற்று, செயல்பாடுகளில் மிகுந்த ஈடுபாடுடையோருக்கு, கர்மகாண்டம் (செய்பலனில் பற்றின்மை) உபதேசிக்கப்பட

வேண்டுமெனவும், ஆனால் அது வீடுபேறடைய உதவாதெனவும், அதற்கு ஞானம் மட்டுமே வழியாகும் எனவும் அருளினார்.

வீடுபேறடையத் தேவையான ஞானத்தைப் பெறச் சாதனமென (கருவிகள்) நான்கு பண்புகள் கூறப்படுகின்றன. அவை : சமம் (மன அமைதி), விசாரணை (பகுப்பாய்வு), சந்தோஷம் மற்றும் சாது சங்கம் (நல்லோர் கூட்டு) ஆகும். இவை ஞானத்திற்கு வாயிற்காப்போன்களாக உருவகப்படுத்தப்பட்டுள்ளன. இத்தகுதிகளைப் பெற்றவன் சற்குருவை அடைந்து ஞானம் பெற வேண்டும். ஆதலால் எதனைத் தியாகம் செய்தேனும் இப்பண்புகளில் ஒன்றையேனும் கைக்கொண்டால், மற்றவை தாமே அம்மாணவனை வந்தடையும் எனப்பட்டுள்ளது.

உலகியலில் உள்ளோருக்கு, விடயமானது (பொருளும் அனுபவிப்பும்) மாயை ஆதலால், **“விரவரிய விடயமெனும் விடவிடுசி விவேகமிகுந்த (அ) வர்க்கல்லால் விலக்கொணாதே”** (விர அரிய =தீண்டத்தகாத, விடவிடுசி=நஞ்சு, விவேகம்=பகுத்தறிவு) என்று கூறி, ஆதலால் விவேகமுடையவன் மாயை எவ்வாறு தோன்றியது என ஆராயாது, அதனை எவ்வாறு நீக்கலாம் என முயல வேண்டும் எனவும், அத்தகைய மாயையை நீக்கும் வழிமுறையாக, **“அடர்தனம்நட் புறவுபர தேசம் தீர்த்தம் ஆச்சிரமம் மெய்வருத்தம் அனைத்தினாலும் தொடர்உதவி இல்லை மனவருத்தத்தாலே தூயபதம் உறும்முத்தி....”** என மனக் கட்டுப்பாட்டினைப் ப் போற்றிக் கூறியுள்ளார். இதற்குக் குருவின் சொல் மற்றும் சாத்திரம் கூறும் மனமின்மைக்கான (மனோநாச) வழிகளைக் குறிக்கோளாக்கிக் கடைப்பிடித்து, ஆனால் அவற்றாலான பயன் எதனையும் விரும்பாதிருப்பவருக்கு மாயை நீங்கி மறையுணர்வு வலிதின் வரும். ஆனால் மாயை நீங்காதவருக்கு முன்னர்க் கூறிய நான்கு வாயிற்காப்போன்களும் கூட உதவ இயலாது போகும்.

வீடுபேறடைய, ஆன்ம அனுபவ உணர்வு(அபரோட்சம்) பெற வேண்டும். இதற்கு நூலறிவை (பரோட்ச ஞானம்) வாழ்க்கை முறையாக இடைவிடாப் பயிற்சி செய்ய வேண்டும். கேட்டு, படித்து, தெளிவடைதல் (மனன, நிதித்யாசனம்) மூலமாக சமாதிநிலை கிட்டும்.

இந்நிலை ஞானத்தைத் திடப்படுத்தும். சமாதியும் ஞானமும், ஒன்றைத் திடப்படுத்த மற்றொன்று உதவுவதால், இரண்டையும் ஒருசேரக் கடைப்பிடிக்க வேண்டும்.

ஞானத்தைத் தேடும்போது, சரியான அறிவுநெறி (யுக்தி) யோடு யார் கூறினும் ஏற்க வேண்டும். அவ்வாறின்றி, மாறாகவோ மொழிக் குதர்க்கமாகவோ (விதண்டாவாதம்) பேசப்படுவதை ஒதுக்க வேண்டும். ஒப்பற்ற, உவமை கூற இயலாத பிரம்மம் பற்றி, நாம் அறியும் ஒப்புமை/உவமை ஆகியன ஏகதேசமே (ஒரு சார்புடைய/தாழ்ந்த) எனப் புரிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு பயிற்சி செய்து முதிர்வடைந்தவன்/முன்னேறியவன், எத்தகையோனாவான் என்பதை

"அற்புதங்கள் அனைத்துமிலா இவனுக்கு அந்த
அருஞ்சீவன் முத்திபதம் அடைவின் முற்றும்
சொற்புலனுக்கு அதீதனாய்உலகர் போலத்
தோன்றிடுவோன் புந்தியிலோர் தொழில் பற்றாதோன்
நற்பயன் பொல்லாப்பயனால் சுகம்சோர்வு இல்லோன்
நண்ணியது புசித்து இனிது நன்றாய் நிற்போன்
பொற்புறு நல்ஆசார விரோதமான
போகங்கள் தமில் சிறிதும் பொருந்திடாதோன்"

எனவும், அத்தகையவன் சீவன்முத்தி பெற்றபின் என்ன ஆவான், என்பதை,

"பாவனைதீர் துரியமதில் இளைப்பு நீங்கிப்
பவமென்னும் கடல்கடந்து பாரஞ் சேர்ந்தோன்
சீவனென நின்றாலும் சீவத்தன்மை தீர்ந்தாலும்
இல்லறத்தில் செறிவு உற்றலும்
கேவலம்சந் யாசியாயிருந்த போதும்
கிளர்சுருதி மயக்கத்தால் கிடைப்பட்டாலும்
யாவதும்செய் தும்தவிர்ந்தும் பயனொன்றில்லை
யிமகிரிஉ றாக்கடல்போல் இயல்பில் நிற்பன்" எனவும்

கூறி இப்பிரகரணத்தை நிறைவு செய்கிறார்.

(பிற்குறிப்பு: வீடுபேற்றில் விருப்பமுடையவன் (முமூட்சு) எத்தகைய தகுதிகளும், பயிற்சிகளும் உடையவனாதல் வேண்டுமென இப்பிரகரணம் தெளிவாக்குகிறது.

இப்பிரகரணத்தின் முதல் ஐந்து பாடல்களில் வாசனை பற்றிக் கூறுவனவற்றை, முன்னர் விசுவாமித்திரர் (I/01/01)வாசனை பற்றி இராகவருக்குக் கூறியதன் தொடர்ச்சி / விளக்கம் எனலாம்.

சுகர் கதையில் (I/02/02) மாயை பற்றிக் கூறுகையில் பொய்யென அறிந்ததை நம்பாது கேள்வி கேட்கலாமா எனப்பட்டது. இது முனிவர்கள், சற்குருமார்களுக்கான தெய்வீக நிலை (பாரமார்த்திகம்). தற்போது மாயை பற்றி விரிவாகக் கூறி அதை நீக்கும் பயிற்சி முறைகள் பற்றிக் கூறுவது நம்போன்று துன்புறுவோருக்கான (லௌகீகருக்கான) வியவகார நிலை. இவ்வாறு கேட்பவர் உத்தம அதிகாரியா அல்லது மந்த அதிகாரியா எனும் தகுதி அறிந்து உபதேசம் மாறுபடுகிறது.

வசிட்டர், அவர்தம் உபதேசம் தொடங்கும் முன்னர், **"குருவடிவ மங்கலம் செய்து கொண்டும், வித்தையின் சம்பிரதாய சுத்தியைக் காண்பித்துக் கொண்டும்....."** எனக் கூறியுள்ளமையாவது: வசிட்டர் ஞானியாதலால், குரு வணக்கமே அவருக்கு இறைவணக்கமாகும். ஆதலால் தனியே இறைவணக்கம் கூறப்படவில்லை. வித்தையின் சம்பிரதாய சுத்தியில் நூலின் இலக்கணம் தெளிவாக்கப்படும். அதன்படி, இந்நூலுக்கு,

| | | |
|---|---|---|
| 1. | மங்களாசரணை (பாயிரம்) | : ஆன்மாவை வணங்குதல் (பொன்னுலகத்தினில் எனத் தொடங்கும் பாடல்) |
| 2. | விஷயம் (இது பேசும் பொருள்) | : பிரம்மம் |
| 3. | அதிகாரி(அறியத் தகுதியுடையவன்) | : இராகவர் மற்றும் துன்ப நீக்கத்திற்கு வழி தேடுவோர் |
| 4. | பிரயோஜனம்(நூற்பயன்) | : வீடுபேறடைதல் |
| 5. | கர்த்தா(நூலாசிரியர்) | : வால்மீகி முனிவர். |

இத்துடன் முமூட்சுப் பிரகரணம் முடிவடைகிறது)

*தொடரும்....*

## கொண்டும் கொடுத்தும்

(முனைவர் பழ. முத்தப்பன், முன்னாள் முதல்வர்,
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி)

சைவத் திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஆகும். திருப்பல்லாண்டில் இரண்டாவது பாடல்,

"மிண்டு மணத்தவர் போமின்கள்
மெய்யடியார்கள் விரைந்து வம்மின்
கொண்டும் கொடுத்தும் குடிகுடி
ஈசற்கு ஆட்செய் மின்"

என்பது அப்பாடலின் முன்பகுதியாகும். மதம் கொண்ட மனத்தவர்கள் அகலுங்கள், மெய்யடியார்கள் விரைந்து வாருங்கள். இறைவனின் அருளை ஏற்றுக் கொண்டு உடலையும் உயிரையும் இறைவனுக்கு அடிமையாக்கி வாழுங்கள் என்பதுபாடல் பகுதியின் பொருளாகும். இப்பாடற் பகுதியின் மூலம் ஆன்மாக்கள் இறைவனின் அருளைப் பெற்று, இறைவனுக்கு ஆட்பட வேண்டும் என்பது வலியுறுத்தப் பெறுகிறது. ஆனால் ஆன்மாவுக்குக் கூறப்பட்ட இச்செய்தி இறைவனுக்கு ஆகிய முறைமையைச் சுந்தரர் வரலாற்றில் காண முடிகிறது. அதாவது சுந்தரர் பெருமானைத் தோழமையாகக் கொண்டு இறைவன் அவருக்கு ஆட்செய்தமையைச் சுந்தரர் வரலாற்றின் பல நிகழ்வுகள் வெளிப்படுத்துகின்றன. எனவே இறைவன் சுந்தரரிடம் கொண்டும் கொடுத்தும் எவ்வாறு விளங்கினான் என்பதைச் சிறிது சுட்டிக் காட்டுவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தோழமை கொள்ளல்:**

ஓலை காட்டி இறைவன் திருவெண்ணெய் நல்லூரில் ஆட்கொண்ட பிறகு அங்கிருந்து புறப்பட்டு, பல திருத்தலங்களையும் வழிபட்டுச் சுந்தரர் திருவாரூர் திருத்தலத்திற்கு வருகிறார். திருத்தலத்து இறைவனாம் புற்றிடங்கொண்டாரை வணங்கிப் பதிகம் பாடிப

போற்றினார். அப்பொழுது ஒரு வாக்கு எழுந்தது என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் சுந்தரர் வரலாற்றில் குறிப்பிடுகிறார்.

"வாழிய மாமறை புற்றிடங் கொள்
மன்னவன் அரனருளால் ஒரு வாக்கு
தோழ மையாக உனக்கு நம்மைத்
தந்தனம்" (பா 121)

என்று சேக்கிழார் கூறுவதால் சுந்தரரை இறைவனே விருப்பமுற்றுத் தோழமையாக்கிக் கொண்டான் என்பது புலனாகின்றது. சுந்தரர் இறைவனைத் தோழமையாகக் கொள்ள வேண்டும் என்று நிகழ்வு சுந்தரிடம் அமையாது இறைவனே சுந்தரரைத் தோழமையாகக் கொண்டார் என்று நிகழ்வைச் சேக்கிழார் அமைக்கிறார். இவ்வாறு அவர் அமைப்பதற்கு ஆதாரம் சுந்தரர் பாடிய திருநள்ளாற்றுப் பதிகத்தில் அமைந்த,

"அடியற்கு எளிவந்த தூதனைத்
தம்மைத் தோழமை அருளி
தொண்டனேன் செய்யும் துரிசுகள் பொறுக்கும்
நாதனே"

என்று பாடிய பகுதி அமைகிறது. எனவே சுந்தரரை இறைவன் தோழமையாகக் கொண்டான் என்பது பெறப்படுகிறது. இவ்வாறு தோழமையாகக் கொண்ட இறைவன் எத்தகைய அருளைக் கொடுத்தான் என்பதைச் சுந்தரரின் வரலாற்றுச் செய்திகள் மூலம் சேக்கிழார் பல நிகழ்வுகளைத் தருகிறார்.

**தந்தை, மாமன் உறவு :**

திருவாரூரில் சுந்தரர் தங்கியிருந்த பொழுது பரவை நாச்சியாரைத் திருக்கோயிலில் சந்திக்கிறார். பரவையாரும் சுந்தரரை நோக்கினார். இருவரின் உள்ளத்திலும் காதல் அரும்பிற்று. காதல் வேட்கையால் சுந்தரர் இறைவனிடத்தில் பரவையைத் திருமணம்

புரிந்து கொள்ள உதவ வேண்டுகிறார். பரவையைத் திருமணம் செய்து கொள்ள மானிடர்களை நாடாது இறைவனை நாடிய சுந்தரரின் செயல் இன்றைய சமுதாயத்திற்கு ஒரு எடுத்துக் காட்டாகும். சுந்தரரின் வேண்டுகோளை ஏற்ற இறைவன் கனவில் சுந்தரரிடம்,

"மன்னும் புகழ் நாவலர்கோன் மகிழ
மங்கை பரவை தன்னைத் தந்தோம்
இன்ன இவ்வகை நம்அடியார் அறியும்
படியே உரைசெய்தனம் என்று அருளி" (பா 50)

என்று அருளியதாகச் சேக்கிழார் குறிப்பிடுவார். இதன்படி இறைவன் தாமே பரவையாருக்குப் பெற்றோராகிச் சுந்தரருக்குப் பரவையை மணம் முடிக்கும் நிகழ்வை நிகழ்த்தியிருக்கிறான் எனத் தெரிகிறது. இவ்வாறு சேக்கிழார் பாடுவதற்குச் சுந்தரரின் திருவொற்றியூர் பதிகப் பாடல் அடிப்படையாக அமைகிறது.

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு இடனாய்
மாழை ஒண்கண் பரவையைத் தந்து ஆண்டானை"

என்பது அப்பாடற் பகுதியாகும். சுந்தரரின் பரவையைத் தந்து என்ற தொடர் சேக்கிழார் பரவை தன்னைத் தந்தோன் என்று பாட வழிவகுத்தது எனத் தெரிகிறது. எனவே மணப்பெண்ணைப் பெற்றோர் இன்றித் தாமே தருகின்ற அளவிற்குத் தந்தை, மாமனாய் உறவு முறையை இறைவன் சுந்தரருக்கு வழங்கியமை பெறப்படுகிறது.

**ஒப்பந்தக்காரர் பணி :**

சுந்தரர் வரலாற்றில் இறைவன் சுந்தரருக்காகப் பல செயல்களைச் செய்திருக்கிறான். அதில் ஒன்று குண்டையூர் நெல்லை இறைவன் திருவாரூரில் நிரப்பிய பணி குறிப்படத் தக்கதாகும். இந்தச் செய்தியைச் சுந்தரர் பாடல் மூலமாகவும், சேக்கிழாரின் கவி

மூலமாகவும் நடந்த நிகழ்வுகள் தற்கால ஒப்பந்தக் காரர் (காண்ட்ராக்டர்) பணியை நினைவூட்டுகிறது.

இறைவனிடத்தில் சுந்தரர் "நீளநினைந்தடியேன்" எனத் தொடங்கிக் "குண்டையூர் சில நெல்லுப் பெற்றேன், ஆளில்லை எம்பெருமான் அவை அட்டித்தரப்பணியே" என வேண்டுகிறார். சுந்தரரின் வேண்டுகோள் இறைவன் மூலம் நடைபெறாது அவனின் ஆட்கள் மூலம் நடைபெற வேண்டுவது போல அமைகின்றது. இதனைக் கொண்டு சேக்கிழார் பெருமான் இந்த நிகழ்வைப் படைக்கும் பொழுது கீழ்வரும் தொடர்களை அமைக்கிறார்.

"பகற்பொழுது கழிந்ததன்பின் பரவைமனை
அளவின்றி ஆரூர் நிறையப்
புகப்பெய்து தருவன நம் பூதங்களென
விசும்பில் நிகழ்ந்தது ஒரு வாக்கு" (பா.ஏய.21)

என்பன அக்கவித் தொடர்களாகும். இன்றைய ஒப்பந்தக்காரர்கள் கட்டிடத்திற்குரிய பொருள்களைப் போக்குவரவுக்கு இடையூறு இல்லாமல் இரவுப் பொழுதில் கட்டும் கட்டிடத்திற்கு முன்னே எவ்வாறு நிரப்புவார்களோ, அதுபோலச் சேக்கிழார் பகற்பொழுது கழிந்து என்று குறிப்பிட்டு இரவுப்பொழுதில் நெல்லைக் கொண்டு வந்து திருவாரூரில் சேர்ப்பதாகக் குறிப்பிடுகிறார். மேலும் ஒப்பந்தக்காரர்கள் தங்களுடைய தொழிலாளிகள் மூலம் பொருள்களை ஏற்றி இறக்குவார்கள் என்பதற்கேற்பச் சேக்கிழாரும் தருவன நம் பூதங்கள் என்று குறிப்பிட்டுச் சிவபெருமானின் பூதப் படைகள் அத்தொழிலைச் செய்யும் என்று குறிப்பிடுகின்றார். இத்தகைய அமைப்பு இன்றைய ஒப்பந்தக் -காரர்களின் பணியை நினைவு படுத்துவதால் இறைவன் சுந்தரருக்கு ஒப்பந்தக்காரர் அடிப்படையில் நெல்லை ஏற்றி இறக்கியிருக்கிறார் எனத் தெரிகிறது.

**செல்வழித்துணை : (டூரிஸ்ட்டர்)**

சுந்தரர் திருப்புயம்பியத்தில் இருந்து திருமுதுகுன்றம் செல்ல

முற்படுகின்றார். செல்லும் வழியில் திருக்கூடலையாற்றூர் திருத்தலம் உள்ளது. ஆனால் சுந்தரர் அத்திருத்தலத்திற்குச் செல்லாது நேரே திருமுதுகுன்றம் செல்வதற்கு முற்படுகின்றார். அந்த நேரத்தில் இறைவன் அவரைக் கூடலையாற்றூர் திருத்தலத்தை வணங்கச் செய்ய வேண்டும் என்று நினைந்து வேதியர் வடிவில் சுந்தரருக்கு எதிரே செல்கின்றான். அவரிடம் சுந்தரர் திருமுதுகுன்றத்திற்கு வழிகேட்க, அவருக்கு இது திருக்கூடலையாற்றூர் செல்வதற்கு வழி என்று கூறி அவரை அந்நகருக்கு அழைத்துச் சென்று விடுகிறார். இச்செயல் இன்றைய டூரிஸ்ட்டரின் செயல் போல் அமைந்துள்ளது என்பது சேக்கிழாரால் தெரிய வருகிறது. வேதியரிடம் சுந்தரர்,

"இன்றுயாம் முதுகுன்றம் எய்தவழி எமக்கியம்பும்
குன்றிமல்லாளி யாரும் கூடலையாற்றூர் ஏறச்
சென்றது இவ்வழிதான் என்று செல்வழித் துணையாய்ச் செல்ல"
(பா. 120)

என்று கேட்டதற்கு விடை கிடைத்ததாகச் சேக்கிழார் குறிப்பிடுவார். இதில் சுந்தரருக்கு இறைவன் செல்வழித் துணையாய்ச் சென்றார் என்று குறிப்பிடுவது இங்கே டூரிஸ்ட்டர் என்ற ஆங்கிலச் சொல்லிற்கு ஏற்ற தமிழ்ச் சொல்லாக அமைந்து தோழமை ஏற்ற சுந்தரருக்கு இறைவன் செல்வழித்துணைப் பணி செய்து அருள்கொடுத்தது பெறப்படுகிறது.

**காவல்துறைப் பணி :**

சேரமான் பெருமாள் அளித்த செல்வத்தோடு திருவாரூர்க்குப் புறப்பட்ட சுந்தரரை வழியில் வேடர்கள் தடுத்துச் செல்வத்தைப் பறித்துச் சென்றனர். இந்நிகழ்வைக் கூறவந்த சேக்கிழார்,

"பொருவிடையார் நம்பிக்குத் தாமே பொன்கொடுப்ப தல்லால்
ஒருவர் கொடுப்பக் கொள்ள ஒண்ணாமைக்கு அதுவாங்கிப்
பெருகருளால் தாம்கொடுக்கப் பெறுவதற்கோ அது அறியோம்"
(பா.கழ 185)

என்று குறிப்பிடுவார். இந்நிகழ்வு மூலம் சேக்கிழார் இன்றையக் காவல்துறைப் பணியை நினைவு படுத்துகிறார். அதாவது இழந்த பொருள்களை இன்றையக் காவல் துறையினர் பறித்துச் சென்றவரிடம் இருந்து பெற்று, இழந்தவர்களிடம் கொடுப்பதைத் தங்கள் பணியாகக் கொள்வார்கள். அதுபோலத்தான் இறைவனும் வேடர்களைத் தானே அனுப்பிப் பறிக்கச் செய்து மீண்டும் சுந்தரருக்குக் கொடுக்கிறான். தாமே ஆட்கள் மூலம் பறிப்பதும் பின் கொடுப்பதும் ஆகிய செயலை இறைவன் ஏன் செய்தான்? என்று சேக்கிழார் சிந்தித்து ஓர் கருத்தை இப்பகுதியின் மூலம் வெளிப்படுத்துகிறார். அதாவது தான் தோழமையாகக் கொண்ட நண்பனுக்குத் தான்தான் பொருள் கொடுக்க வேண்டுமே தவிரச் சுந்தரன் மற்றவர் கொடுக்கக் கொள்வதைத் தான் ஏற்றுக் கொள்ள முடியாது என்பதற்கோ இவ்வாறு பறித்துக் கொடுத்தான் என்று சேக்கிழார் தம் கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். இப்பகுதியைப் படிக்கும் பொழுது சேக்கிழாரின் பெருமை உள்ளத்தில் மகிழ்வைத் தருகிறது. எனவே சுந்தரரைத் தோழமையாகக் கொண்டு இறைவன் காவல்துறைப் பணியையும் செய்து அருள் கொடுத்திருக்கிறான் எனத் தெரிகிறது.

இதுபோலச் சுந்தரரைத் தோழமையாகக் கொண்ட இறைவன் வங்கிப் பணியைத் திருக்கச்சிமேற்றளியில் சுந்தரருக்கு வேண்டும் பொருளைக் கொடுத்து நிகழ்த்தியதும், வலக்கண் இடக்கண்களைக் கொடுத்து மருத்துவப் பணியாளராக அருளியதும், தாய்மை உறவைச் சுந்தரரோடு ஏற்படுத்திக் கொண்டதும், தூதுவராகத் திகழ்ந்ததும் அரிய செயல்களாக அமைந்து, சுந்தரர் வாழ்க்கையில் இறைவன் கொண்டும் கொடுத்ததைக் காணமுடிகிறது இதனால். இக்கால வாழ்வியலோடு சுந்தரரின் வாழ்வியல் செய்திகளை ஒப்பிட்டுக் காணமுடிகிறது. திருமுறையின் சிறப்பும் வெளிப்படுகிறது.

*திருச்சிற்றம்பலம்.*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### திருநகரப் படலம்

பொருபுனல் திடர்இடைப் பூத்த கொம்பர்மேல்
மருவிநாற் புறக்கயல் வாவிப் பாய்வன
வெரு(வு)அமை பற்பல வீர வாள்எடுத்(து)
ஒரு(வு)அற ஆடுகூத் தியரை ஒக்குமே. 19

தன்னுடைக் குறிவெளிப் படுத்த தன்மையில்
பொன்னுடைத் தாமரை பூத்த ஓடைநீர்
மின்உடைக் குலிசிகண் விழித்து வீழ்ந்(து)அவண்
மன்னுடைக் கிடத்தலை மானும் என்பவே. 20

அறிவரும் பல்குலை அமைந்த கந்தியின்
நறியமெல் இடை செழு நாக வல்லிதான்
செறிதரும் அதன்வழிச் செல்லும் சங்கமும்
குறிதரு சுண்ணமாம் கிழமை கொண்(டு)என 21

இந்திர தனுப்புடை எய்தி நின்(று)அசை
கந்தியின் பழம்உகும் கதலிக் கூன்குலை
முந்(து)இரா கவன்சிலை உண்டை மூத்தல்இல்
நந்திய கூனிவெந் நடுவின் வீழ்ந்(து)என 22

இந்நகர்ப் புடைவளை பொழில்எ முந்துபோய்ப்
பொன்நகர்க்(கு) அமைநிழல் புரித லால்அன்றோ
அந்நகர்த் தலைஅமர் அமரர் யாவரும்
நன்னர்மெய் வேர்(வு)அற நன்கு வாழ்வதே. 23

மருவும்இந் நகர்ப்புறச் சோலை மாமலர்ப்
பொருவரு மணம்சுரர் உலகு போர்த்தலால்
ஒரு(வு)இல்கற் பகமணம் உற்ற(து) இல்லையேல்
உருகுபொன் பூவினில் நாற்றம் உள்ளதோ. 24

## புறநகர்(வேறு)

ஒருமருப்(பு) உடைய யானை ஒன்றையே வணங்கும் நான்கு
பெருமருப்(பு) உடைய யானை எதிர்ப்படின் வணங்கும் பேரால்
இருமருப்(பு) உடைய யானை இராயிரம் எனக்கி ளைத்து
வருமருப்(பு) உடைய யானை ஆகுவா னங்கள் வைகும். 25

மழைமதக் களிநல் யானைத் துதிக்கைமண் துழாவி யாளும்
விழைதரு தன்னைச் சார்ந்த விந்தியம் விரும்புமாறு
பிழைதபு கந்தம் ஊட்டும் பிறங்(கு) உறச் சார்ந்(து)உ ளோர்க்குக்
குழை(வு)அற உரிய(து)ஊட்டிக் காத்தல்செய் குணத்தர் போன்றே. 26

பொன்நகர் இறைவன் ஊரும் புரவிஒன்(று) உள்ள(து) என்பார்
அன்னது மண்ணின் மேவற்(கு) அஞ்சிடும் யாம் அஞ்சாது
மின்நகும் வானம் செல்வேம் என்றது வெளிசெய்(து) ஆங்குப்
பன்னுகால் நிலந்தோ யாது பாய்ந்துசெல் பரிகள் பல்ல. 27

மாயவாம் புரவி ஒன்று பின்வரும் என்பார் அன்ன
தாய்அ(து)இப் போது வந்தால் அறியலாம் என்னும் திண்மை
மேயது மாற்றார் சென்னி மேல்அடி வைப்ப(து) ஆய
பாய(து)ஆம் புரவி யாத்த மந்திரம் பலஉண்(டு) அங்கண் 28

பாதலம் பாதம் காண முடிதலம் பைம்பொன் ஆய
மாதலம் காண இந்த மண்தலம் செல்லும் பொன்தேர்
மீதலம் ஒன்றே கண்டு விண்தலத்(து) இடையே செல்லும்
காதல்அம் கதிரோன் தேரை அசிப்பது கதிர்வெண் முத்தால் 29

இடைஇடை அசுரர் வந்து தடுத்திட இடர்ப்பட்(டு) ஓடும்
இடைகதி ரவன்தேர் பேய்த்தேர் மேற்செல்லும் தடைஒன்(று) இன்றி
அடையலர் புரங்கள் மூன்றும் அழித்தவன் ஆய எல்லாம்
உடையவன் தேர்மேல் செல்வோம் என்னும்தேர் உலப்(பு)இ லாத 30

மேல்எதிர் மேவு மேனும் விழித்தகண் இமையார் கோட்டுத்
தோல்எதிர் தாக்கு மேனும் துணைப்பதம் பெயரார் ஓங்கல்
மேல்எதிர் வீழு மேனும் பிடித்தவாள் சோரார் வெய்ய
கால்எதிர் உடன்று செல்ல வல்லவர் கணிப்(பு)இல் வீரர் 31

கருதுவெஞ் சினத்தின் அண்ணல் கால்எடுத்(து) உதைத்த போது
பொருதிறல் அழியப் பட்டும் புறங்கொடான் ஆகி வீழ்ந்த
ஒருவனை வியந்து கொள்வார் ஒருங்குபல் வீரர் கூடி
வெருவரும் படைகள் கற்க விளங்குகல் லூரி பல்ல. 32

### அகநகர்

புவியினுக்(கு) உடுக்கை ஆகிப் பொலிதரும் அளக்க ரேபோல்
குவிமதிற்(கு) உடுக்கை ஆகி வஞ்சகர் கொள்கை போல
அவிதல்இல் வன்மீன் ஆதி அகங்கொடு புறத்தே மிக்க
செவியுடை மலர்பல் கொண்டு பாம்(பு)உரி சிவணு மாலோ. 33

மருவிஅந் நகரம் வாழும் மாதவர் தவம்போல் ஓங்கி
உருஅமை விடயம் சாரா(து) ஒழித்(து)ஒளிர் அவர்ம னம்போல்
வெருவரும் பகைஞர் வந்து மேவுதல் ஒழித்(து)ஒ ளிர்ந்து
பொருஇல்மற(று)அ வர்போல் சற்றும் சலிப்(பு)அறு புரிசை மேவும்34

### பரத்தையர் வீதி

ஆடலின் அவிந யத்தில் அமிழ்தும்கைத் திடயாழ் கொண்டு
பாடலில் நகைத்துச் சாய்த்துப் பார்த்தலில் முலைதி றந்து
மூடலில் உடையின் மிக்கு முருகுகொப் பளிக்கத் தொங்கல்
சூடலில் அளவில் காமம் துறுப்பவர் சேரி மல்கும். 35

ஆடவர் என்னும் நன்செய் அகல்விழிப் பார்வை என்னும்
பாடரும் விலையில் கொண்டு முலையலத்(து) உழுது பற்றி
வீடரும் காமம் மேன்மேல் வித்துபு வாய்நீர் பாய்ச்சி
நாடரும் அவர்தம் செல்வ விளைவினை நன்கு கொள்வார். 36

துளைபடு முத்தம் நல்கித் துளைபடா முத்தம் கொண்டும்
கிளைபடு பவளம் நல்கிக் கிளைபடாப் பவளம் கொண்டும்
வளைபடு தனம்கை நல்கி வளைபடாத் தனம்கைக் கொண்டும்
விளைபடு போகம் துய்ப்பார் அவர்வயின் விரும்பி மைந்தர் 37

இலக்கம்முன் னாகச் செம்பொன் எண்ணில் முதலாக் கொண்ட
விலக்கரும் வணிகர் தாமும் மிக்(கு)இறும் பூது கொள்ளக்
கலக்கம்இல் பொதுமின் னார்ஓர் அரைப்பணம் முதலே கைக்கொண்(டு)
உலப்பரும் கோடி செம்பொன் தினந்தொறும் உவந்து சேர்ப்பார். 38

அறைபெரு விருப்பம் பொங்க ஆடவர் தம்மோ(டு) ஆடி
நிறைமகிழ் திளைக்கும் போது நிறைபொருள் அவாவில் தீரா(து)
உறைதலில் கணிகை மாதர் இல்லறத்(து) உறைந்து மேலாம்
மறைமுடிப் பொருளில் தீரா ஞானியர் மானு வாரால் 39

இருள்மலர்க் கூந்தல் மின்னார் அடைதரும் இளையர் தம்பால்
பொருள்முதல் மூன்றும் கொண்டு போக்(கு)அற இனிது பேசித்
தெருள்பணி களும்அன் னாரே செய்யப்பெற்(று) இன்பு நல்கின்
அருள்மிகு குரவ ரேஎன்(று) அறைதரற்(கு) ஐயம் இன்றே 40

உறுப்பினில் குறைத ராத ஒள்இழை மனைவி மார்பால்
பொறுப்புவைத்(து) இவர்பால் உற்று வேலையும் புரிந்து காத்துக்
கறுப்புவிட்(டு) உழல்வர் என்னில் கணிகையர் நல்கும் இன்பம்
இறுப்புமே வாத முத்தி இன்பமோ அறித ரேமால். 41

பரவுதண் கழனி வாயில் பரத்தையர் மறுகு சேர்தல்
விரவுசா லோகம் அன்னார் மனைபுகல் மிளிர்சா மீபம்
உரவுசெய் அவர்மெய் தீண்டித் தழுவுதல் உயர்சா ரூபம்
வரவுபோக்(கு) இறந்த இன்பம் மற்றொன்(று)என்(று) உணர்ந்தார்
போலும் 42

அவர்உணில் தாமும் உண்டார் ஆகுவர் உவகை என்ப(து)
அவர்உறில் தாமும் உற்றார் ஆகுவர் அதற்கு மா(று)ஒன்று
அவர்படில் தாமும் பட்டார் ஆகுவர் மைந்தர் என்னில்
அவரொடு தாம்வே(று) இன்றி அமைதரல் உற்றார் போலும். 43

பரத்தை நா(டு)என்று நூல்கள் பகருவ(து) எல்லாம் அந்தப்
பரத்தையர் தம்மைச் சாதி ஒருமையில் பகர்ந்த(து) என்றோர்
பரத்தைஉள் கொண்டு மைந்தர் விடா(து)உழல் பவரே ஆகில்
பரத்தையர் முன்பு செய்த தவத்தின்ஓர் பழுதும் உண்டோ 44

### வேளாளர் வீதி

பழு(து)அகல் மலரின் மேலான் பாதத்தில் பிறந்து நாளும்
உழுதொழில் புரிந்து மூவர்த் தாங்கிடும் உரவு மிக்கார்
செழுமயில் பாகன் பாதத்(து) அருச்சனை செய்து நாளும்
வழு(வு)அறுத்(து) உயரும் வேளாண் மாந்தர்மா ளிகையும் பல்ல 45

வளம்பொலி கழனி வேளாண் மாக்கள்தாம் விருந்தில் கூட்டும்
உளம்பொலி விருப்பம் செய்யும் உபசாரம் உணர்ந்து நீரில்
தளம்பொலி இளசை மாறர் தாமும்அவ் வாறே செய்து
களம்பொலி விடத்தான் பாதம் கலக்கும்ஓர் வாழ்வு பெற்றார் 46

### வைசியர் வீதி

உடைஅவிர் மலரின் மேலான் ஊருவில் தோற்றம் உற்றோர்
அடைதரு பிறவும் தம்ம போற்செயும் அன்பின் மிக்கார்
இடையறல் எதுவும் இல்லார் ஈகையில் குறைஒன்(று) இல்லார்
நடைகெழு வணிகர் வாழும் மாளிகை நலமும் ஓர்பால். 47

உள்ளதோ இதுநும் பால்என்(று) ஒருவர்வந்(து) உறவின்ஆ வா(து)
எள்ளரி தாய ஈது நல்குதிர் என்ன ஈயத்
தள்ளரும் பொருள்கள் எல்லாம் செறிதரச் சமைந்து நாளும்
கள்ளம்இல் வணிகர் மேவக் கவின்பொலி நியமம் பல்ல 48

இந்நகர் வணிக மாக்கள் வீதியில் இருநாள் முந்நாள்
நன்னயம் தரித்தல் செய்து நகுபொருள் ஈட்டி னோனை
முன்னவன் கருணை மூர்த்தி முக்கண்எம் பெருமான் அம்பொன்
மன்னவன் எனும்பேர் சாத்தி வடதிசைக்(கு) உரிமை நல்கும் 49

கருதரும் கழனி வாயில் காமரு வணிகர் தம்பால்
பொருதரும் உவப்பி னோடும் புகுந்(து)இ ரவாரும் இல்லை
மருவுமற்(று) அவர்பேர் கூறின் மரித்திடா மிடியும் இல்லை
வெருவரும் அனையார் செல்வ மிகுதியும் அளப்பார் இல்லை 50

பொருளினை ஈட்டும் போது புத்திரர் முதலோர்க்(கு) என்று
மருள்உற ஈட்டா நிற்கும் மடமையோர் நாணும் கொள்ளத்
தெருள்மிகும் அன்ன தானம் சிவாலய தருமம் ஏற்றோர்
வெருள்மிடி அகற்றற்(கு) என்றே ஈட்டுவர் விரும்பி நாளும் 51

## அரசர் வீதி

புண்ணிய மறைவ லாளன் புயத்(து)இடைத் தோற்றம் உற்றார்
அண்ணிய பகைவர் மண்கொண்(டு) அவர்க்குவிண் கொடுக்க வல்லார்
எண்ணிய முடிக்கும் நீரார் எய்தரும் திறலின் மிக்கார்
கண்ணிய அரசர் வாழும் மாடமும் கலந்த(து) ஓர்பால் 52

பொருபரி இவர்ந்து செண்டு போம்படி செலுத்து வாரும்
வருமதக் கலுழி யானைப் போர்கண்டு மகிழ்கின் றாரும்
திருஅனார் ஆடல்பாடல் திருந்துஉறத் துய்க்கின் றாரும்
வெருவரும் இனையர் ஆகி மன்னவர் வாழ்வார் மேன்மேல் 53

## மறையவர் வீதி

விதிமுகத்(து) உதித்து வந்தார் விதிவிலக்(கு) அனைத்தும் ஓர்ந்தார்
பதிஉவப்(பு) அடையு மாறு ப(சு)உடம்(பு) அழித்தல் செய்வார்
பொதிதரும் அழல்வி டாது போற்றிடும் வலியின் மிக்கார்
மதிஅமை மறையோர் வாழும் மாடமும் அள(வு)இ லாத 54

புனிதநீர் முழுகிப் பின்பு போக்குகோ வணத்தி னோடு
கனிதரும் ஈரம் தீரா உடைஇடைக் கண்உடுத்துப்
பனியநீர்க் குடமும் தாங்கிப் பரவுதம் கிருகம் புக்குத்
துனிஇல்மா தர்கள்அட் டுட்டி அதிதியர் துலங்கச் செய்வார். 55

அரைஇடை முஞ்சி நாண்சேர்த்(து) அறுவைமுன் கொய்து தூங்கப்
புரைஅறு மான்தோல் சேர்த்த பூணுநூல் ஒருபால் சார
வரைசெயும் பலாசக் கோலின் மாணிகள் பல்லோர் கூடிக்
கரைஇலா மறைகள் ஓதும் கிடைமிகக் கவினும் மாதோ 56

ஒருபிறப்(பு) அடைந்த பின்னர் இருபிறப்(பு) உவந்து மேவி
மருவுமுத் தழலும் ஓம்பி மறைஒரு நான்கும் தெள்ளிப்
பொருபொறி ஐந்தும் ஓம்பிப் புரிபகை ஆறும் தீர்ந்து
கரு(து)எழு பிறப்பு நீத்(து)எண் குணன்அடி கைக்கொள் வாரே 57

கொங்(கு) அலர் கடுக்கை வேணிக் குழகர்ஐம் முகத்துத் தோன்றித்
தங்கள்ஆன் மார்த்தத் தோடு பரார்த்தபூ சனையும் போற்றிப்
பொங்குவே தாக மங்கள் புரைஅறத் தெளிந்து நாளும்
துங்கம்ஆர் ஆதி சைவர் இருக்கையும் துலங்கும் அங்கண் 58

முகைகெழு முல்லை அன்ன முரி(வு)இல்லா அமுதும் செம்பொன்
நகைகெழு பருப்பும் பற்பல் நறும்புகைக் கருனை பாகும்
தகைகெழு பாலும் நெய்யும் தயிரும்நல் அயிரும் மற்றை
வகைகெழு பிறவும் நல்கும் சத்திரம் வயங்கும் ஓர்பால் 59

பொலிமணல் பரப்பி மீது புதியமட் கலம்நி ரைத்(து)ஆங்(கு)
ஒலிகெழு நறுநீர் வாக்கிப் பாடலத்(து) உறுபூ விட்டு
நலி(வு)இலா நறிய மோரும் இலிகுச நல்கு சாறும்
மலியவே(று) அமைத்து வாக்கும் பந்தரும் மலிவ ஆங்கண் 60

பகைதவிர் கருத்தி னோடு பதப்பொருள் காட்டும் மற்றை
வகைவினா விடைமுதன் யாவும் வயக்கிஜ இருதோம் போக்கி
நகைசெய்அவ் வழகோ(டு) உத்தி நால்இரு நான்கும் சேர்த்துத்
தகைஇயல் தெரிக்கும் கல்விச் சாலையும் உளதால் அங்கண் 61

தெளிதரு புகழ்வே தாந்த சிரவணம் திருந்தச் செய்தே
ஒளிதரு மனனம் ஆதி இரண்டினும் உரவோர் ஆகிக்
களிதரு பவஞ்சம் உற்றும் கான்றிடு சோற்றில் கண்டு
வெளிதரு பிரம மேயாய் மேவுவார் மடம்ஒன்(று) உண்டால் 62

முழுஊனும் கருங்கண் நல்லார் முலைமுகடு அழுந்த வந்து
தழுவினும் வருந்திப் பெற்ற தாயென மதிக்கும் நீரார்
எழுவினும் சிறந்த திண்தோள் இந்திரா தியர்வாழ்(வு) எல்லாம்
வழுவினும் கவலை சற்றும் மனங்கொளா வலியர் அன்னார். 63

இருவினைப் பயனாய் உள்ள இன்பமும் துன்பம் தானும்
மருவுறின் உடம் பினுக்கு முன்னமே வாய்ந்த என்று
பருவரார் உவவார் செய்ய பசும்பொனும் ஓட்டில் காண்பார்
பொருவரும் பெருமை யோடு சிறுமையும் பூணார் மாதோ 64

உதிக்குமுன் எழுந்து போந்தே ஒள்ளிய புனலில் தோய்ந்து
திதிக்கும் வெண்நீறு பூசித் திருந்துகண் மணிகள் பூண்டு
மதிக்கும் ஐந்(து)எழுத்தும் எண்ணி வாஞ்சையில்கேட்ட பாடம்
பதிக்கும்உள் ளத்தர் ஆவார் பகற்பொழு(து) எவரும் அங்கண் 65

துதிகதிர் விழும்முன் போந்து துலங்குவெண் நீறு பூசிக்
குதிகொள் பேர்அருள் பிரானார் கொற்றவாள் ஈசர் தம்மைத்
திதிபுரி நெல்லை மாதைச் சேவித்துப் போற்றிப் பின்னர்
மதிஅமை குரவற் போற்றி வாஞ்சையில் பாடம் கேட்பார் 66

மதிஒரு புறத்து மேவ மதிஎதிர் இரண்டு பாலும்
பொதிஉடுக் கணங்கள் நாளும் பொருந்தி வைகிடுமேல் அந்தத்
திதிஅமை கழனி வாயில் திருமடத்(து) இனிது மேவி
வதிகுர வனுக்கு மாணாக் கருக்கும்ஒப்(பு) உரைக்க லாமோ 67

உரைமுதல் சாத னத்தர் ஒருபுறம் இரண்டால் என்று
கரைதரு சாத னத்தால் ஒருபுறம் கவின்மூன்(று) என்று
வரைதரு சாத னத்தால் ஒருபுறம் வருநான்(கு) என்ன
விரைதரு சாத னத்தார் ஒருபுறம் விரும்பும் அங்கண் 68

முப்பதப் பொருளின் உண்மை முதன்மையின் விசாரம் செய்தே
தப்(பு)அறு நிட்டை கூடி யாவும்தாம் ஆகக் கண்டு
செப்பம்உற்(று) இருப்பார் பல்லோர் அவர்பணி செய்கை மேற்கொண்(டு)
ஒப்(பு)அற ஒழுகா நிற்பார் குழாங்களும் ஒருசார் மல்கும் 69

மின்னிய செம்பொன் செய்த விமானத்து விளங்கா நிற்கும்
துன்னிய சோதி லிங்க சொரூபனை ஆட்டி ஊட்டி
மன்னிய நந்தீ சற்கு மகிழ்ச்சியால் அவ்வா(று) ஆற்றிப்
பன்னிய துதியி னோடும் பணிபவர் பல்லோர் ஆங்கண் 70

நலம்மலி சோதி லிங்க சொரூபற்கும் நந்தீ சற்கும்
வலம்மலி செம்பொன் கோவில் உண்தொழில் மாணச் செய்தான்
புலம்மலி விசும்பில் வாழும் புண்ணிய மயனோ கஞ்சத்
தலம்மலி பிரமன் தானோ யார்என்று சாற்ற வல்லேம் 71

கறிபல திருத்து வாரும் தண்டுலம் களைகின் றாரும்
பறிநிறப் பருப்(பு)ஆ ராய்ந்து கொதிஉலைப் படுக்கின் றாரும்
நறியநெய் உருக்கு வாரும் நாறுகுய்ப் புகைஉய்ப் பாரும்
செறிதர அடுதல் வல்லார் இன்னராய்த் திகழ்வர் ஓர்சார் 72

இத்தகு மடம்முன் ஆக இசைத்தமா ளிகைகள் எல்லாம்
ஒத்தன சூழா நிற்ப உடைநடுப் பொலியா நிற்கும்
சத்(து)அறி(வு) இன்ப ரூபத் தனிப்பரா பரையி னோடும்
குத்தரச் சிலையார் நாளும் குடிகொள்ளும் செம்பொன் கோவில் 73

ஒருமகவு அழுத போதில் ஓடிவா என்றி டாமல்
வருமைகொள் திருமுன் மேவில் அருள்பெறல் ஆகும் என்றே
பெருமைகொள் கீர வேலை பெட்(டு)அடைந் தமர்தல் மானும்
திருமுனர்க்(கு) உடைந்தோர் பாவம் சிதர்மதுப் பொய்கை மாதோ 74

முத்தொழில முதல்வன் என்றே முழுமறை இயம்பா நிற்கும்
அத்தகு வார்த்தை யாரும் அறிதரத் தெருட்டும் மாதோ
உத்தமன் திருமுன் போற்றி மூவரும் உறநின்(று) என்ன
வித்தகம் செறியும் செம்பொன் கோபுரம் விளங்கு மாலோ 75

கொற்றவாள் ஈசர் ஏவ லால்கொழு விடைகண் மேற்கொண்(டு)
உற்(று)அழுந் தாது போனால் உலவுபொன் மதில்ஓர் மூன்றும்
செற்றிடும் படிமு யன்றோர் திருநகர் ஒருங்கு சாயச்
சுற்றிடித்(து) உறுதூள் ஆக்கும் சுடர்மதில் மேல்போய் மாதோ 76

வடதிசை மருஇல் செண்டு புடைத்தலார் மாற்று வார்என்(று)
அடல்கெழு மேரு அம்மான் அருள்பெறல் கருதி வந்து
கெடல்அரி(து) ஆய பல்வே(று) உருக்கொ கெழுமல் போலும்
சுடர்விடு செம்பொன் செய்த சூழுறை தேவர் கோவில் 77

இடர்தபு நம்பேர் பூண்டும் வெப்பமே இயற்றி நாளும்
அடர்நடு மேவா நிற்கும் அதற்குநாண் இலைஎன்(று) எள்ளிச்
சுடர்அடி நீழல் எல்லா உயிர்க்கும்செய் தூயோற்(கு) என்றும்
படர்குளிர் நீழல் செய்யும் பாச(சு)இலை வன்னி மாதோ 78

பற்(று)உறக் கிளைத்து விண்ணம் படர்ந்(து)எழு பசிய வன்னி
நிற்றலை உணர்ந்து செங்கேழ் இரவிமண் டலம்நேர் வந்து
மற்றதை உணர்ந்து நிற்கும் வண்ணமே புரையும் எங்கள்
கொற்றவாள் ஈசர் மேய குருமணி விமானம் மாதோ 79

மறைபுகல் விதியி னால்தான் வயங்கிய சிற்பம் செய்து
கறைதபு பசும்பொன் வேய்ந்து கதிர்மணி பதித்த லாலே
முறைவரு செங்கேழ் ஆதி மூவரும் மிகையே என்ன
நிறைஇருள் சீக்கும் எங்கள் நெல்லைநா யகிவி மானம் 80

குலவுவெங் காமம் ஆதி கொடும்பகை ஒழித்தல் வேண்டின்
நிலவுபேர் அருள்சால் எங்கள் நெல்லைநா யகிமுன் இவ்வா(று)
உலவுமெய் அன்பின் வீழ்ந்து கிடமின்என்(று) உணர்த்தல் போலக்
கலவுத லொடுகி டப்பான் கருதும்ஓர் பெரியோன் அம்மா 81

கொற்றவாள் ஈசர் முன்பு குடந்தம்பட்(டு) ஏத்து வாரும்
முற்றஆ தரித்து நெல்லை முன்நின்று துதிக்கின் றாரும்
பற்(று)அவாய் மற்றை ஏனோர் பாற்சென்று பணிகின் றாரும்
பொற்றஆ லயத்தில் எங்கும் பொற்புறப் பொலிவர் மாதோ 82

நல்இயல் மகதி வீணை நரப்(பு)இசை முழக்கம் ஓர்பால்
பல்லிய முழக்கம் ஓர்பால் பகர்பல்லாண்(டு) எடுத்தல் ஓர்பால்
வில்இயல் நால்வர் செவ்வாய் விளைந்தபாட்(டு) ஒலியும் ஓர்பால்
அல்இயல் கதுப்பின் நல்லார் ஆட்(டு)ஒலி ஒருபால் அங்கண் 83

அள(வு)அரும் தவங்கள் ஆற்றி அரியசா ரூபம் உற்ற
அள(வு)அரும் பெருமை யாளர்க்(கு) அடிநிழல் அளித்(து)அன் னார்தம்
அள(வு)அரு நுதற்கண் எல்லாஞ் வரிசையில் அமைத்தான் மானும்
அள(வு)அரு வாயில் தோறும் அள(வு)அரும் தீபப் பொம்மல் 84

நிலவிய வளத்தால் மிக்கு நிரம்பும்அக் கோயில் உள்ளால்
உலவிய உயிர்கட்(கு) எல்லாம் ஓங்(கு)இருங் கருணை பூத்துக்
கலவிய எழிழ்சால் தெய்வக் கற்புடை நெல்லை யோடும்
குலவிய அருள்சால் எங்கள் கொற்றவாள் ஈசர் வாழ்வார். 85

*திருநகரப் படலம் நிறைவுற்றது. ஆக விருத்தம் 199*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**